உ

ஓம்குகாய நம.

# திருச்செந்தூர் ஸ்தல புராணம்

[சுருக்கம்]



★



தொகுப்பாளர்:

திருச்செந்தில் ஸ்தானிகரும், முருகனடியாருமான

திரு. T. S. கணபதி சாஸ்திரிகள் அவர்கள்










[விலை அணா 6

# முன்னுரை



செந்தில் வாழ்கந்தனின் திருவருளினாலே "திருச்செந்தூர் ஸ்தல புராணம்" என்ற இந்நூலை மூல கிரந்தத்திலிருந்து தொகுத்து வெளியிட்டுள்ளேன். இதுபடிக்கும் பக்தர்கள் அனைவரும் முருகன் அருளுக்குப் பாத்திரமாவார்கள் என்பதில் ஐயமில்லை.

ஆக்கியோன்

ஓம் குஹாய நம

# திருச்செந்தூர் ஸ்தலபுராணம்

## வணக்கம்

"யானைமுகனும், தொந்தி வயிறுடையோனும், ஸகல விக்கினங்களையும் நீக்குபவனும், உமாதேவியின் திரு மகனுமாகிய விக்னேஸ்வரனை வணங்குகின்றேன்.

## ஸூதமுனிவரிடம் முனிவர்கள் கேட்டுக்கொண்டது

ஷட்குணஸம் பூரணராகிய செளனகமஹர்ஷி அனிமிஷக்ஷேத்திரத்தில் தன்யாகத்தை ஆரம்பித்தார். யாக மண்டபத்திலே விஸ்வாமித்திரர் வஸிட்டர் முதலான ரிஷிகள் தம் ஆசனங்களில் அமர்ந்திருந்தனர். அப்பொழுது நிர்மல சித்தரும் மஹாயோகியுமான ஸூத முனி, முனிவர்களின் முன்னிலையில் கூப்பிய கரங்களுடன் வந்தார். அது கண்ட முனிவர்கள் யாவரும் மிகவும் மகிழ்ந்து வரவேற்று, ஸூதமுனியை நோக்கி "கலிதோஷங்களை நாஸம் செய்வதை விநோதமாக்கிக் கொண்டிருக்கும் பரமாத்மாவான ஸுப்ரமண்யருடைய திவ்விய கதைகளை அறிய நாம் விரும்புகின்றோம். உலக ரக்ஷையின் பொருட்டு தாரகாஸுர ஸுரபத்மா ஸுரர்களை ஸம்ஹரித்து, ஜயந்தி என்னும் க்ஷேத்திரத்தில் தன் பக்தர்களுக்கு போக மோக்ஷங்களை நல்கி, இரண்டு தேவிமாருடன் இகபரசெளபாக்கியங்களைக் கொடுத்து ஸன்னிதானம் செய்கிறாரென்று முன்னொருகால் கேள்விப்பட்டோம். முனிவரே! ஜயந்தி அப்பெயர் பெற்றவரலாறும், கந்தமாதனபர்வதம் கொண்டுவரப்பட்டதும் வல்லி தேவசேனைகளுடைய திருமணம் நடந்த வரலாறும் நாங்கள் அறியும்படி விரிவாக அக்கதைகளை சொல்லியருள வேண்டும்" என, ஸூதமுனி சொல்லலுற்றார்.

## ஸுப்ரமண்யர் திரு அவதாரம்

முன் ஒரு கால் அஸுரர்களால் தங்கள் பதவிகள் யாவும் இழந்த தேவதைகள் திருக்கயிலைசென்று தங்கள் கஷ்டத்தைத் தெரிவிக்க கருணையுடைய பரமேஸ்வரன் பார்வதி தேவியாரோடு பல்லாயிரம் ஆண்டுகள் க்ரீடித்துக் கொண்டிருந்துவிட்டார். அது கண்ட தேவர்கள் பயமடைந்து ஈஸ்வரனை நோக்கி பூத கணங்களுக்குத் தந்தையாகிய தாங்கள் வெகுகாலம் க்ரீடை செய்வதனுல் உற்பத்தியாகும் சந்ததி பயங்கர பூதமாய்விடுமோ என அஞ்சுகிறோம். ஆகவே க்ரீடையை நிறுத்தி எங்களை பாதுகாத்தருளவேண்டும் என வணங்கினர். அதுகண்ட மஹேஸ்வரர் தேவர்களின் நிலைகண்டிரங்கி, "தேவர்காள்! நம் கிரீடையால் உண்டாகும் வீரியத்தை பூமிதேவி தாங்கிக் கொள்வாள். இதனுல் உங்களுக்கு க்ஷேமமுண்டாகும்" என்றார். இவ்வாறு அனுப்பப்பட்ட வீர்யத்தை பூமாதேவி சிலகாலம் சுமந்து பலம் குறைந்தவளாய் அதை அக்னியிடமனுப்ப, அக்கினியும் தளர்ந்து அதை கங்கா ஜலத்தில் விட்டுவிட, கங்கைநதி அதை தன் அலைகளால் கரையில் ஒதுக்க, அவ்விடத்தில் நாணல் காடு உண்டாகி அதன் மத்தியிலே ஸுப்ரமண்யர் உதித்தார்.

ஸுப்ரமண்யர் ஜனனமானதை சகல தேவர்களும் அறிந்து, மகிழ்ந்து, குழந்தைக்குப் பால் கொடுக்க கிருத்திகா தேவியர்களை அனுப்ப அவர்கள் ஆனந்தம் கொண்டு தங்கள் கொங்கைகளில் சுரக்கும் பாலைக் கொடுத்து ஸ்தன்யபானம் செய்வித்தார்கள். உடன் அந்த ஷண்முக மூர்த்தி 16 வயதான இளமைபருவத்துடன் நித்ய குமாரனுகி கிருத்திகா தேவியர்களால் கார்த்திகேயனென்று அழைக்கப்பட்டார். பிறகு மகாவிஷ்ணு தன் நேத்திரத்தில் உற்பவித்த வல்லி என்னும் அழகு பொருந்திய கன்னிகையை தன் மருமகனுகிய

ஆறுமுகனுக்கு தேவர்கள் ரிஷிகணங்கள் முன்னிலையில் கன்னிகாதானம் செய்ய ஸுப்ரம்மண்யரும் மகிழ்ந்து வல்லி தேவியைக் கல்யாணஞ் செய்து கொண்டார்.

பின்னர் ஸுப்ரம்மண்யர் தேவகணங்கள் பூத கணங்கள் விண்ணுகணங்களோடும் வீரபாகு முதலான தேவர்களோடும் தாரகாஸுரனுடைய பட்டணம் சென்று அமரர்களுக்குப் பகைவனுகிய தாரகன், கஜமுகன், பானுகோபன் முதலிய அசுரர்களை ஸம் ஹரித்தார்.

அமரர்குலத்தரசனுகிய இந்திரன் தனது ராஜ்யம் திரும்பக்கிடைத்தது கண்டு மிகவும் மகிழ்ந்து முனிவர் களுடன் ஸுப்ரம்மண்ய ஸ்வாமியின் ஸந்நிதானம் சேர்ந்து வணங்கி மஹாவிஷ்ணுவின் நேத்திரத்தில் உற்பவித்தவளும் ஸ்வர்ணம் போன்ற அழகுடையவளு மான தேவசேனையை அசுரகுலத்தை அழித்த ஷண் முகனுக்குதாரை வார்த்துக் கொடுத்தான். கார்த்தி கேயரும் தேவசேனையை விதிப்படி மணந்து இரண்டு தேவியார்களுடன் சோபித்தார்.

பின்பு பார்வதியின் அருமைத் திருமகன் ஸுப்ர மண்யக்கடவுள் தேவர்களைப் பார்த்து,தேவர்களே பரத கண்டத்தில் சமுத்திரதீரமாகவும் ஒருமா நதிக்கு ஸமீப மாகவும் ஒரு மலையின் நுனியில் திவ்ய க்ஷேத்ரமொன்று ஆராய்ந்து சொல்லுங்கள். நாம் அவ்விடத்தில் ஸான் னித்யஞ்செய்து தேவர்களுக்கும், முனிவர், மனிதர் முத லான ஸகலப் பிராணிகளுக்கும் போக மோட்சங்களை யளித்து வருவோமென திருவாய் மலர்ந்தருளினர்.

## தேவர்களுடன் ஸுப்ரமண்யர் திருச்செந்தூர் எழுந்தருளிய வரலாறு

தேவர்கள் அது கண்டு மகிழ்ந்து "சுவாமி தென்திசை யிலே ஸகல பாவங்களையும் நாசம் செய்கின்ற தாம்ர பர்ணி என்ற நதி ஸங்கமமாகும் இடமொன்றுள்ளது.

இவ்விடத்திற்கு ஐந்து மைல் தூரத்திற்கப்பால் கடற் கரையிலே ஸகல ஆகமநூல்களும் புகழுகின்ற ஜயந்தி என்ற பெயர் கொண்ட புண்ய க்ஷேத்திரமும் கந்தமா தனமென்ற ஒரு பர்வதமும் இருக்கின்றன. இஃது மிக வும் அழகோடு கூடியஸ்தலம். இதற்கு ஸமமான ஸ்தலம் இதற்குமுன் உண்டாயிருக்கவில்லை. இனிமேலும் உண் டாகப்போவதில்லை. ஓ, ஸரவணபவனே! தேவரீர் வல்லி தேவசேனை என்ற தேவிமாருடன் அவ்விடத்தில் வீற்றி ருந்து பக்தி செலுத்துகின்றவர்களை பாவக்கடல் தாண செய்து போக மோக்ஷங்களைக் கொடுத்து அருள்பா லிக்க வேண்டும்" என்றனர்.

தேவர்களின் உரைதன்னைக் கேட்ட குகபகவான் மிகவும் மகிழ்ந்து ரோமாஞ்சிதராகி வல்லி, தேவ சேனை என்ற இரண்டு தேவிமாருடனும் சிறந்த விமானத்தின் மீதேறி ஆகாஸமார்க்கமாக தேவர்கள், கந்தர்வர்கள், நவக்கிரகங்கள் முதலியோர்களால் ஸேவிக்கப்பட்டு, பர் வதங்கள், நதிகள், நகரங்கள், காடுகள் ஆகியவைகளையும் பாவத்தைத் தொலைக்கும் வல்லமையுள்ள விஷ்ணுவின் ஆலயங்கள் சிவாலயங்கள் முதலியவைகளைப் பார்த்து மகிழ்ந்து புண்ய ஜயந்தி க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந் தார். கந்தமாதன பர்வதத்தினுச்சியில் விஸ்வகர்மா வினல் உண்டாக்கப்பட்ட ஆலயத்தில் எக்காலமும் ஸன்னிதானம் செய்து ஸகலரையும் நன்றாக பரிபா லித்துக் கொண்டு ஜனங்களை பாவபந்தங்களிலிருந்து விடுவித்து ஆசி கூறிவருகிறார்.

## ஹேமமுனி சாபத்தால் கந்தர்வர்கள் வேடரானதும், வல்லியவ தாரமும், சாபவிமோசனமும்

முன் ஒரு காலத்தில் ஹேமனென்ற ஒரு முனிவ ரானவர் மகாமேருபர்வதத்திலமர்ந்து நாராயணனைக் குறித்து தவம் செய்து வருங்கால தேவர்கள் அவரின்

தவத்தைக் கெடுக்க எண்ணி கோவைப்பழம் போன்ற அதரத்தையுடைய அப்ஸரஸ் ஸ்திரிகளை அவரிடம் அனுப்பினார்கள். அவர்கள் முனிவரின் முன்தோன்றி ஆடல் பாடல் நிகழ்த்தினார்கள். இதனால் முனிவரின் ஸமாதிநிலை குலைந்தது. அவர்கோபத்தால் வெகுண்டு எழுந்து, "ஓ பாவிகளே? என் தவத்திற்கு இடையூராக நீங்கள் இருந்ததால் ஆண்கள் வேடுவர்களாகவும் பெண்கள் வேட்டுவஸ்திரிகளாகவும் ஆகக்கடவீர்க" ளெனச் சபித்தார்.

சபிக்கப்பட்ட தேவர்கள் திடுக்கிட்டு நிலை குலைந்து முனிவரை வணங்கிச் சரணடைந்து, அவரை நோக்கி "ஸரணடைந்தோரைக் காப்பவரே! நாங்கள் மதியீனத்தால் பிழைசெய்து விட்டோம். எங்கள் குற்றத்தை மன்னித்து எங்களுக்கு சாப விமோசனம் அருளல் வேண்டும்" எனக்கூறி பணிந்து நின்றனர்.

அதுகண்ட முனிவர் அவர்களது நிலை கண்டிரங்கி "ஓ தேவர்களே! நான் கூறுவதைக் கவனித்துக் கேளுங்கள். முன்கிருதாயுகத்திலே பரமஸிவத்தின் குமாரராகிய ஸுப்ரமண்யர் சூரபதுமன் முதலான ஸகலதுஷ்டர்களையும் வதஞ்செய்து விஷ்ணுவின் கண்களிலிருந்து உண்டான வல்லி, தேவஸேனை என்ற மாதர்களை முனிவர்களின் முன்பாக விதிப்படி மணந்துதிருச்செந்தூரில் இன்பங்களை அநுபவித்து வரும் காலையில் முதல் மனைவியாகிய வல்லி நானே சிறந்தவள் தேவஸேனை எனக்கு நிகராகாள் என இறுமாப்புக் கொண்டு இரவும் பகலும் தன் சக்களத்தியாகியதேவஸேனையை நிந்தித்துவந்தாள். தேவஸேனையோ வல்லியம்மை தனக்குச் செய்யும் அவமானம் முதலியவைகளைப் பொறுத்து தன் கணவனுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து பொறுமையுடனிருந்து வந்தாள் உலக ரக்ஷகனுகிய ஸுப்பிரமணியர் இவை அனைத்தையும் ஞானதிருஷ்டியால் அறிந்து

வல்லியை அழைத்து, “வல்லி தேவி! நாம் சொல்வதைக் கேள்! எனது இரண்டாம் மனைவியை நீ அவமதித்தனை. இதனால் நீ கொடிய பாதகியாயினை. அப்பாவத்தின் பலனை நீ அனுபவித்தாலன்றி, அஃது உன்னை விட்டகலாது. ஆகவே நீ திர்யக் ஜாதியில் பிறக்கக்கடவை. பிறகு நீ வேடுவர்களால் வளர்க்கப்பட்டு வரும்பொழுது, நான் முனிவர்களுடன் வந்து முறைப்படி உன்னை மணந்து கொள்வேன்” எனக் கூறினார்.

வல்லி தேவியானவள் மிகவும் வருந்தி இருக்குங்கால், ஆறுமுகனின் திருவாக்குப்படி காஞ்சனை என்ற ஒரு ஸ்திரியிடம் பிறக்கப் போவதாக தெரிந்தது. காஞ்சனை ஒரு அப்ஸரஸ் கன்னிகையாவாள். அவள் மான் வடிவத்தோடு பூதலத்தில் தவம் செய்து வருகிறாள். ஆகவே “ஓ தேவர்களே! நீங்கள் அக்குழந்தையை எடுத்துக் காப்பாற்றி வாருங்கள் அவள் பருவமடையும் சமயத்து கருணைக் கடலாகிய முருகன் வந்து அக்கன்னிகையை மணந்து கொள்வார். அவரது அருளால் நீங்களும் ஸாபம் நீங்கப்பெற்று ஸ்வர்க்கத்தில் சுகமாகவாழக் கடவீர்கள்” என்று கூறவும், தேவர்கள் வேடுவர்களாகி பூமியில் விந்திய வனத்திலே காய் கிழங்குகளைத் தின்று ஜீவித்து வரலானார்கள்.

இவ்வாறு இருக்குங்கால் ஒருநாள் காஞ்சனை என்ற மானும் பூர்ணகர்ப்பமாகி,மெள்ள மெள்ள வேடுவர் குடிசையை அடைந்து தனது பிரஸவ வேதனையைத் தெரிவித்தது.

வேடர்களும் மனமகிழ்ச்சி கொண்டு அதனை ரக்ஷித்தனர். பின்னர் காஞ்சனையும் நல்லதொரு நக்ஷத்திரத்தில் சுபமுகூர்த்தத்திலே,ஒரு அழகிய அதிசயக்கத்தக்க ஓர் பெண் குழந்தையைப் பெற்றெடுத்தது. பின்னர் காஞ்சனை தேவப் பெண்ணாகி யாவரும் காணகைலாயம் அடைந்தாள்.

பின்னர், வேடுவர்கள் அக் குழந்தையைத் தங்க ளரசனிடம் கொண்டு செல்ல, அரசன் அக் குழவியைக் கண்டு மகிழ்ந்தான். வேடர்கள் கருநெய்தல் பூவைப் போன்ற நீண்ட கண்களையும், சண்பகப்பூவைப் பழிக்கும் மூக்கையும், பவழம் போன்ற உதடுகளையும், முத்துப் பற்களையும், தாமரைபோன்ற கைகால்களையும், தங்கநிற மேனியையும் உடைய இக் குழந்தையால் நம் பாவம் விலகுமெனச் சந்தோஷத்துடன் பேசிக்கொண்டனர்.

வேடராஜனும் அக் குழந்தையைத் தன் புத்திரியாக அபிமானித்து இவளை அநேக கோடி பிரம்மாண்டங் களுக்கு இறைவனே பாணிக்கிரகம் செய்யத் தகுதி யுள்ளவன் எனத் தீர்மானித்துத் தன் மனைவிகளிடம் கொடுத்து வளர்த்து வந்தான்.

தேவனது கட்டளையால் வேடனும் அக் குழவியை வல்லி என்று பெயரிட்டு அவளழகைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருந்தான்.

## திருப்புனத்தில் வள்ளியிடம் ஷண்முகமூர்த்தி சென்று அவள் கருத்தறிந்து வேடராஜனிடம் சென்றது

தோழிமாருடன் வள்ளியானவள் ஜயந்தி க்ஷேத்தி ரத்திற்குச் செல்லுங்கால், அதற்குச் சமீபத்திலிருக்கும் தினைக் காட்டில் ஊர்க்குருவிகள் கூச்சலிடுவதைக் கண்டு அவ் வனத்தில் புகுந்தாள். அவ் வனத்தின் அழகிலே மனமகிழ்ந்த வள்ளி, தினந்தோறும் அவ் வனத்திற்குத் தன் தோழிமாருடன் சென்று வரலானாள். இவ்வாறு இருக்குங்கால், ஒருநாள் பார்வதியின் திருக்குமாராகிய ஸுப்ரமணியர் இளைப்பாற வேண்டி மயில் வாஹனத் தின் மீதேறி ஆகாயத்தில் சஞ்சரித்து வரும்பொழுது வள்ளியைக் கண்டு மோகித்து மாரன் கணையால் கட்டப் பட்டு, பிராமண வேடம் பூண்டு அவளுடன் இனிய

வார்த்தைகளையாடினுர். "பெண்மணியே, நீ யாருடைய புத்ரி? உனக்கு பர்த்தா யார்? அல்லது தாய்யார்? உன் ஊர் எது? உன் வீடு எங்கே? உன்னைப் பார்த்தவுடனே என் மனம் கலங்கி மதனனுக்குள்ளாயின. நீ இன்னும் விவாகமாகாத கன்னிகையாய் இருப்பின் உன்மேல் பேராசைகொண்டுள்ள என்னை மணந்துகொள்!" என்று கூறவும், வள்ளி "ஈசா! என் பெற்றோர் இழிந்த வேடுவ குலத்தில் உதித்தவர்கள்; என் வீடு ஒருகல் தொலைவிலே யுள்ளது, நான் இன்னும் கன்னியே" என்றுள். செந்தி லாதிபன் அவளை நோக்கி, "பெண்ணே! நீ எனக்கு மனை யாளாக வேண்டுமென"க் கூற, வள்ளி அவரை நோக்கி "கன்னிகைகள் தாய் தந்தையரின் அனுமதியின்றி தானே கணவர்களை நாடுவார்களாயின் உலகம் அவர் களைப் பழிக்கும். ஆகவே தாங்கள் அவர்களைக் கண்டு கேட்டீர்களானல் அளவற்ற ஸந்தோஷத்துடன் என்னைத் தங்களுக்குக் கொடுப்பார்கள்" என்று புகல, குகனும் மனமகிழ்ந்து வள்ளியின் பிதாவாகிய நம்பி ராஜனிடம் சென்றுர்.

## கணபதியின் ஸகாயத்தால் ஸுப்ரமணியர் வல்லியை மணம்புரிதல்

முருகக்கடவுள் அந்தண வடிவுடனேயே வள்ளியின் பிதா இருக்குமிடம் சென்று, அவரை நோக்கி, தங்கள் புத்திரியாகிய வள்ளியை எனக்கு மனையாளாகக் கொடுக்கவேண்டுமெனக் கேட்க அந்த வேஷதாரியாகிய அந்தணனை ஸுப்ரமணியர் என்பதை அறியாத வேடர் தலைவன் பிராமணனை நோக்கி, "ஓ அந்தணனே! என் புத்திரியாகிய வள்ளியை மயில் வாஹனனுகிய ஸுப்ர மணியருக்கேயன்றி வேறு எவருக்கும் கொடுப்பதில்லை" என்றுர். இது கேட்டு மயிலேறும் பெருமான் மகிழ்ந்து

கொஞ்சம் திருவிளையாடல் புரியும் நினைப்புடையவராக அவ் வேடன் மனைவிட் டகன்றார்.

பின்னர், குகன் வள்ளி இருக்கும் தினைப்புனம் சென்று வேண்டியதெல்லாம் தருவதான ஒரு கற்பக விருக்ஷமாக நின்றார். புதியதாகத் தோன்றிய அம் மரத்தை வள்ளியும் அவள் தோழியரும் கண்டு மகிழ்ந்து அம்மரத்தினடியில் படுத்தார்கள். அம் மரத்தின் மகிமையால் வள்ளி தன்னை மறந்த நிலையிலே எல்லாம் மறந்து ஆழ்ந்த நித்திரையி லாழ்ந்தாள்.

வள்ளி வெகு நேரமாக வராதது கண்ட வேடன் கலங்கிய மனத்தினனாய் வனத்திற்கேக, அங்கே புதிய மரத்தையும் அதனடியில் நித்திரை செய்யும் வள்ளியையும் கண்டான். 'இங்கே ஏது புதிய மரம், என்ன ஆச்சரியம் இது ஒரு இந்திர ஜாலமாகத்தான் இருக்க வேண்டும் ஆகவே இதை இப்பொழுதே வெட்டிவிட வேண்டும்' என எண்ணிய வேடன் கோடாலியைத் தன் கையிலே எடுத்தான். அடுத்த விநாடியே அக் கற்பக மரம் காணாது திடீரென மறைந்து போயிற்று. இது ஓர் வஞ்சகத் தோற்றம் என எண்ணிய வேடன் கன்னிகையை அழைத்துக்கொண்டு தனதரண்மனை சேர்ந்தான்.

இஃது இவ்வாறிருக்க, கந்தன் வள்ளிபால் கொண்டுள்ள விரக தாபத்தால் மிக வருந்தி, தன் தமையனாகிய யானைமுகக் கடவுளாகிய விநாயகனை வணங்கி அவரை நோக்கி, "ஓ அண்ணா! எனக்குச் சுகத்தைத் தருவதற்கு உரியவளாகிய வள்ளி என்ற ஒரு கன்னிகை ஓர் வேடன் வசத்திலிருக்கின்றாள். அவளை நானடைய தாங்கள் உதவவேண்டும். வள்ளி இப்பொழுது சமீபத்திலுள்ளதொரு தினைப்புனத்திலே வஸிக்கிறாள். அவ் வனத்தில் தேவரீர் ஓர் யானை வடிவுடன் சென்று அவளைப் பயப்

படுத்த வேண்டும். அச்சமயம் அங்கு தோன்றும் என்னிடம் பயத்தால் அவள் ஓடி வரவேண்டும். பின்னர் நான் அவளை விதிப்படி மணம் புரிதல் வேண்டும்" என்றார்.

முருகனின் வேண்டுகோள்படியே விநாயகர் நடந்து கொள்ள வள்ளி பயமடைந்தவளாய் முருகனை அணைந்து கொள்ள, முருக வேளும் கன்னிகா ரத்னமாகிய வள்ளியுடன் மெய்மறந்து நின்றார்.

தினைப்புனத்திலே நடந்த ஸமாசாரம் முழுவதையும் அறிந்த வேடுவ மன்னன் மகிழ்ந்து தினைப்புனம் அடைந்தான். வேடுவர்களுக்குச் சந்தோஷம் உண்டாகும்படியும் அவர்கள் சந்தேகம் நீங்கும்படியாகவும் ஷண்முகனும் ஆறு முகங்களோடும் மயில் வாஹனனாய், தேவர்கள், அஸுரர்கள், கந்தர்வர்கள், சூரியர்கள், ருத்திரர்கள் அப்ஸரஸ்கள் முதலியவர்களால் ஸேவிக்கப்பட்டு மகா தேஜஸ்ஸுடன் தோன்றினார். வேடுவர் மன்னன் இக் காட்சி கண்டு மனமகிழ்ந்து யாவரையும் தன் இல்லம் அழைத்துச் சென்று வேத விதிப்படி வள்ளி நாயகியை ஸுப்ரமணியருக்குக் கன்னிகாதானம் செய்து கொடுத்தான். தேவர்கள் பூமாரி பொழிந்தனர். அப்ஸரஸ்கள் நடனமாடினர். கந்தர்வர்கள் கானம் இசைத்தனர். வேடுவர்களும் ஹேம முனிவனின் சாபத்திலிருந்து விடுபட்டு அமர லோகத்தை யடைந்தனர். ஸுப்ரமணியரும் வள்ளி நாயகியுடன் ஸிந்து க்ஷேத்திரத்திற்குப் புறப்பட்டார்.

இஃது இவ்வாறாக தேவசேனை பரமசிவனை நோக்கித் தவம்புரிய அவரும் தோன்ற, அவள் அவரை வணங்கி "ஓய் சுவாமி! தேவரீர் குமாரரான குமரனுக்கும், அவருக்குத் தொண்டு செய்யும் அடியார்களுக்கும், உமது பக்தர்களாகிய எங்களுக்கும் [illegible] அளித்து

அருள வேண்டு'மென கேட்டுக்கொண்டாள். பரமசிவமும் அவ்வாறே அனுக்கிரஹித்து மறைந்தார்.

## ஸ்கந்த புஷ்கரணி வரலாறும் ஆதி ஸேது வென்னும் வதனாரம்ப தீர்த்தமும்

ஸுப்ரமண்யபிரபு தன்னை அஞ்சலி செய்துநிற்கும் த்ரிஸ்வதந்திர முனிவர்களை நோக்கி, "ஓ முனிகளே! நீங்கள் எப்பொழுதும் இந்த ஸிந்து ஸ்தலத்திலே எனக்குப் பிரியம் செய்துகொண்டு வஸியுங்கள். இவ்வாறு நீங்கள் இருப்பதால் உங்களைப் பார்த்த மாத்திரத்தில் ஜந்துக்கள் மோட்சத்தை அடையும். நான் உங்களுள் ஒருவனாக இருந்து உங்களால் ஸேவிக்கப்படுவேன். மகா பாவங்கள் செய்தவனும் இந்த ஸ்தலத்திலே வாசஞ் செய்தால் அவன் செய்த பாவங்களை நீங்கி முக்தியை அடைவான்" என்று கூறினார். குகனின் திருவாக்கைக் கேட்ட த்ரிஸ்வதந்திரர்கள் மகிழ்ந்து வணங்கி அவரை நோக்கி, "தேவரீரோடு வஸிக்கும் பாக்கியத்தை நாங்கள் பெற்றுள்ளோம். ஆனால் ஈண்டு ஓரிடத்திலும் ஜலம் காணப்படவில்லை. ஆகையால் அமிருதத்திற்கொப்பாயும் ஸ்நானபானங்கள் செய்பவர்க்கும் மனுஷ்யர்களுடைய தரித்திரம், வியாதி, இவைகளை மாற்றுந் தன்மையுள்ளதும், தத்துவ ஞானத்தைப் புகட்டுவதும், புத்திரன் பௌத்திரன் என்னும் வம்ச பரம்பரையைக் கொடுப்பதும், மனதின் துக்கங்களை விலக்குவது மாத்திரமின்றி ஒரு தடவை அந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்னும் நான்கு புருஷார்த்தங்களைத் தரக்கூடியதுமாகிய, திவ்விய ஜலத்தை இவ்விடத்தில் நிர்மிக்கவேண்டுமென பிரார்த்தித்தனர்.

பக்தர்களின் வேண்டுகோட்படியே ஆறுமுகனும் ஸக்தி என்னும் ஆயுதத்தைக் கையிலேந்தி, பூமியில் எறிய, அந்த வேல் இருபத்து வில் போகும் தூரத்தில்

தென்திசையில்சென்று பூமியைக் குழித்துவிட்டுத்திரும்பி முருகனின் கரம் வந்தடைந்தது. உடனே கங்கை பிரவாகத்துடன் வேல் குழித்த இடத்தில் பெருக, முருகக் கடவுள் த்ரி சுதந்திரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுது அதில் ஸ்நானம் செய்தார். இவ்வாறு ஸ்கந்தப் பெருமானால் உண்டாக்கப்பட்டத் தீர்த்தம் ஸ்கந்த புஷ்கரணி என வழங்கப்படலாயிற்று. த்ரிஸுதந்திரர்கள் அதில் விதிப்படி நீராடி மகிழ்ந்தார்கள்.

பின்னர் ஜகத் குருவாகிய ஷண்முகன் அவர்களை நோக்கி, "ஓ த்ரிஸ்வதந்திர முனிவர்களே! கேளுங்கள். புகழ்பெற்ற கங்கை, ஸிந்து, காவேரி, இந்நதிகளின் ஸங்கமத்திலும் துவாரகை, கோகர்ணம், ராமஸேது, பத்பநாப க்ஷேத்திரத்தில் சங்கதீர்த்தம், கந்தமாதன பர்வதத்தில் வதனாம்ப தீர்த்தம், நவக்கிரக தீர்த்தம், புருஷோத்தம தீர்த்தம் இவைகளில் எப்பொழுதும் ஸ்நானத்திற்கு விதியிருப்பதால் நீங்களும் மற்றவர்களனைவரும் இந்த வதனாம்ப தீர்த்தத்தில் சதா ஸ்நானம் செய்யுங்கள். இன்னும் ஒரு ரகஸ்யம் கூறுகின்றேன் :- முன்னொரு கல்பத்தில் இந்த ஸிந்துவில் ரகுவம்ச சிகாமணியாகிய ஸ்ரீ ராமன் ஸீதையைத் திருடிக்கொண்டு போன ராவணனை வதைக்க எல்லா பாவங்களையும் தொலைக்கும் ஸேதுபந்தனம் செய்தார். இவ்வாறு மூன்று தடவை கல்பங்கள் தோறும் ஸேதுபந்தனம் செய்தார். இந்த ஸமுத்திரமானது எல்லாக் காலங்களிலும் ஸ்நானம் செய்யத் தகுந்தது. மேலும் ஒரு ரகஸ்யம் கூறுகின்றேன் கேளுங்கள்: முன் காலத்தில் கந்தமாதன பர்வதம் பர்வதராஜனாகிய மேருவுடன் கலகம்தொடர்ந்து தனக்கு மேன்மை கிடைக்க வேண்டுமென்று நம்மை உத்தேசித்துத் தவம்புரிய நாமுமிரங்கி, நீ வரும் பிரம்ம கல்பத்தில் நமக்கு வஸிக்குமிடமாகக் கடவை. அப்பொழுது

எல்லோரும் உன்னை மகா மேருவாகக் கொண்டாடுவார்கள். அதுவரை நம்மை நீ தியானிக்க வேண்டுமென உறுதி கொடுத்தோம். அவ்விடத்திலே நாம் இன்று வாஸம் செய்து வருகின்றோம்.''

இன்னும் ஒரு ரகஸ்யம் சொல்லுகிறேன்: "முன்னொருகால் பிர்ம்மா இறுமாப்புற்றிருந்ததை அறிந்த காலஸிந்தகனுகிய பரமஸிவன் பிரம்மாவினுடைய ஐந்தாவது தலையைக் கிள்ளி எறிந்து, அவரது கர்வத்தை அடக்கினர். உடன் பிரம்மாவானவர் என்னைக் குறித்து தவம் செய்ய, யானும் அவரிஷ்டத்தைக் கொடுக்க ஆங்கு ஸான்னித்யம் செய்து வேண்டியவற்றைத் தருவதாக வரமளித்தேன். அவர் என்னை நோக்கி ஸ்துதித்த பிரகாரம் அந்த ஸ்துதியை யார் ஒருவர் நமது ஸன்னிதியில் படிக்கிறார்களோ அவர்கள் ஸகல சௌபாக்கியங்களையும் பெறுவார்கள். பிரம்மன் பலவாறு வணங்கி பரமஸிவனல் கிள்ளி எறியப்பட்ட தனது ஐந்தாவது தலை வேண்டுமென நமஸ்கரித்தார். என் வேண்டுகோட்படியே பிரம்மன் பரமஸிவனை ஆராதிக்க, கேட்டதைக் கொடுக்கும் ஸம்புவும் ஸான்னித்தியம்செய்து பிரம்மனை நோக்கி, "உமக்கு என்ன வரம் வேண்டும்? நான் தருகிறேன்'' என்று கூற, பிரம்மன் சிவனை பலவாறு துதித்து ஐந்தாவது முகம் கிடைக்க வரமருள வேண்டி நின்றார். அப்பொழுது பரமஸிவன், "ஜயந்தி க்ஷேத்திரத்திலே ஸுப்ரமண்யர் ஸன்னிதியிலிருக்கும் ஸமுத்திரத்தில் ஐந்து நாள் ஸ்நானம் செய்யும். அப்பொழுது ஐந்தாவது முகம் கிடைக்கும்'' என்றருளினர்.

மற்றும் அதிசயிக்கத்தக்க ஒரு தீர்த்த மகான்மியம் இருப்பதையும் கூறுகின்றேன். "முன்னால் கலிங்கராஜனின் பெண்ணான கனக சுந்தரி என்பவள் புத்தியீனத்தால் அகஸ்தியர் ஆஸ்ரமத்தில் ஹயக்ரீவ மூர்த்தியை

அவமதிக்க, அவர் கோபம் கொண்டு, "பெண்ணே! நீ மறு பிறவியில் குதிரை முகத்துடன் பிறக்கக் கடவை" என்று சபித்தார். அவள் உடன், தான் அறியாமல் செய்ததை மன்னிக்க வேண்டுமெனப் பிரார்த்திக்க, அவரும் இரங்கி, "பிரம்மாவிற்கு முகம் கொடுத்த புண்ணிய தீர்த்தமாகிய வதனாரம்ப தீர்த்தத்தில் நீ எப்பொழுது ஸ்நானம் செய்வாயோ அப்பொழுது உனக்கு சாப மகலும்" என்று திருவாக்களித்தார். பிறகு அப்பெண் உக்கிர பாண்டிய ராஜனுக்கு குதிரை முகத்துடன் பிறக்க இது கண்ட மன்னனும் மக்களும் அதிசயத்துடன் மனக்கலக்கமும் அடைந்தனர். அப்பொழுது ஆகாயத்திலே "கங்கை முதலிய பல தீர்த்தங்களிலும் இந்தப் பெண் ஸ்நானம் செய்தால் இதற்கேதுவான பாபம் நீங்கும், ஸௌக்கியமாவாள்" என்ற சப்தத்தைக் கேட்டு யாவரும் மனமகிழ்ந்து ஸந்தோஷத்துடன் வளர்த்து வர அப்பெண் விவாக வயதையடையும் பொழுது தீர்த்த யாத்திரை செய்யுமாறு தகுந்த பரிவாரங்களுடன் அனுப்பினன். அப்பெண்ணும் பல தீர்த்தங்களிலும் நீராடி இறுதியில் திருச்செந்தூர் வந்தடைந்து வதனாரம்ப தீர்த்தத்தில் ஸந்தோஷத்துடன் ஸ்நானம் செய்ய குதிரை முகம் நீங்கி ஸர்வாங்க ஸௌந்தரியாக விளங்கினாள். இச்செய்தி அறிந்த உக்கிர பாண்டியன் மகிழ்ந்து என் ஸன்னதியில் வந்து எம்பெருமானை வணங்கிச் சென்றான். இப்படிப்பட்ட தீர்த்தத்தில் த்ரிஸ்வதந்திரர்களே! நீங்கள் நித்தியமும் ஸ்நானம் செய்து உங்கள் இஷ்டத்தைப் பெறுவீர்கள்."

## த்ரிஸ்வதந்திரர்களின் சரித்திரம்

வேதங்களின் கரை கடந்தவர்களான சில முனி புங்கவர்கள் பிரம்மாவை நினைத்து கங்காநதி தீரத்திலே ஒரு வருஷத்துக்குத் துல்யமாக ஆயிரம் சதுர்யுகமளவும்

மிகவும் கோரமான தவத்தைச் செய்தனர். உடன் ப்ரம்மாவானவர் அவர்களின் முன் தோன்றி "உங்களின் தவ மகிமை கண்டு மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன். உங்களுக்கு வேண்டியவற்றைக் கேளுங்கள்" என்றார். இது கண்ட முனிவர்கள் மகிழ்ந்து வணங்கி, "ஓ ஸரஸ்வதி மணாளனே! எங்கள் தபசு கண்டு தேவரீர் மகிழ்ந்தீரானால் நாங்கள் எங்கள் மனது தோன்றும் பொழுதெல்லாம் (1) தேவரீருலகடைந்து தேவரைபூஜித்து அங்கு சிலகாலம் வாசம் செய்யவும், (2) அப்படியே ஸ்வர்க்கலோகம் சென்று தேவர்களைப்போல வாழவும், (3) இதுபோலவே புண்ணிய பூமியாகிய பூலோகத்தில் வாழவும், இவ்வாறாக மூவுலகங்களிலும் இஷ்டம்போல் ஸஞ்சாரம் செய்து சுகம்பெற அனுக்கிரகிக்க வேண்டு"மெனப் பிரார்த்தித்து நின்றனர்.

ப்ரம்மன் தவசிகள் கேட்ட வரமதனைக் கொடுத்து மறைய, அதுகாலம்முதல் முனிவர்கள் தம் இஷ்டம்போல் மூன்று உலகங்களில் வஸித்து சுகமடைந்தனர்.

இப்படி நிகரற்ற சுதந்திரத்தைப்பெற்ற முனிவர்களில் சிலர் புண்ணிய நதியான தாமிரவருணியின் கரையினிலே சிலகாலம் வாழ்ந்த பின்னர், ஸிந்து ஸ்தலத்தில் சென்று அவ்விடத்தில் ஸன்னிதானம் செய்யும் சுப்பிரமணியரால் வெகுமானிக்கவும், அதுமுகற்கொண்டு ஸ்ரீஸ்வதந்திரர் எனப் பெயரும் பெற்று தேவர்கள்போல் ஸுகமாக வாழ்ந்தார்கள்.

இவ்வாறு விருத்தாச்சலத்தில் ஆயிரம் பேர்கள் பரமசிவனை ஆராதித்து அழிவற்றவர்களாய் ஸ்லோகங்களை பரிசுத்தம் செய்து கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீஜெயந்தி என்னும் திருச்செந்தூரில் இரண்டாயிரம் பேர்கள் சுப்பிரமணியரை வழிபட்டும், சிதம்பரத்தில் மூவாயிரம்பேர்கள் நடராஜனை வழிபட்டும், பிரம்மபுரம்

எனப்படும் சீர்காழியில் நாலாயிரம் பேர்கள் விஷ்ணுவை வழிபட்டும், அருணசலத்தில் ஐயாயிரம் பேர்கள் எப்பொழுதும் பரமேஸ்வரனை நாமகீர்த்தனங்களால் வழிபட்டும், ஜகநாதமென்னும் க்ஷேத்திரத்தில் ஆருயிரம் பேர்கள் விஷ்ணுவை வழிபட்டும், திருவீழிமலையில் ஏழாயிரம் பேர்கள் பரமசிவனை வழிபட்டும், ஹாலஸ்ய க்ஷேத்திரத்தில் எண்ணுயிரம் பேர்கள் மீனுக்ஷிசுந்தரேஸ்வரரை வழிபட்டும், தண்டகாருண்யத்தில் ஒன்பதாயிரம் பிராமணர்கள் ஸ்ரீராமமூர்த்தியை வழிபட்டும், கோகுலத்தில் பதினுயிரம் பேர்கள் மஹாவிஷ்ணுவை வழிபட்டும், நாராயண க்ஷேத்திரத்தில் பதினேராயிரம் பேர்கள் நாராயணனை வழிபட்டும், ஸ்வாமிமலையில் பன்னிரண்டாயிரம்பேர்கள் சுப்பிரமணியரை வழிபட்டும் ஸுகமே வாழ்ந்து வருகின்றூர்கள்.

இவ்விதமான த்ரிசுதந்திரர்களின் மகான்மியத்தை கலியில் எழுந்து எந்த புத்திமான்கள் மனதை நிலைநிறுத்திப் படிப்பார்களோ அவர்கள் எல்லாவித கஷ்டங்களும் நீங்கி புருஷார்த்தங்களை அடைவார்கள்.

## திரிசுதந்திரர்களின் பெருமையும் ஸுப்ரமணியரை ஒவ்வொரு மாதத்திலும் பூசைசெய்யும் விதமும் அதன் பயனும்.

இத் திரிஸ்சுதந்திரர்கள் யாவரும் தேவரகஸ்யங்களடங்கிய ரிக்வேதிகள் ஆகும். அவர்கள் யாவரும் அகங்காரம், மாத்ஸர்யம், கோபம், டம்பம் இவைகளில்லாதவர்கள். நான்கு வேதங்களையும் நன்குணர்ந்தவர்கள். ஔயாசனம், தேவதார்ச்சனம், பரம்யக்ஞம், வைஸ்வதேவம், ஸ்மார்த்தகர்மம் இவைகளைக் குறைவின்றி நடத்துபவர்கள். ப்ரம்ம விஷ்ணு ருத்ரர்களிடத்து ஸமபுத்தியுடையவர்.

ப்ரம்மஹத்தி, உபகாரத்தை மறைத்தல், குருவைக் கொல்லுதல், அவர் மனைவியைப் புணர்தலாகிய கொடிய பாவங்களைச் செய்தவர்களாயினும் அவர்கள் திரிஸ்வதந்திரர்கள் கிரகத்தில் பூஜிப்பதினால் தங்களைப் பற்றிய பாவங்களைப் போக்கிக் கொள்ளுகின்றனர்.

∵ திரிஸ்வதந்திரர்கள் கிரகங்களில் நாள்தோறும் தேவர்கள், பிதிருக்கள் இவர்களை ஆராதிப்பதும், புண்ணிய தீர்த்தமாகிய ஸ்தகந் புஷ்கரணியில் நித்தினமும் ஸ்நானம் செய்தும் ஸுப்ரமண்யரைச் சேவித்தும் வருகிறார்கள்.

திரிஸ்வதந்திரர்கள் விதிப்படி தேகமுழுவதும் விபூதி யுத்துளனம் செய்து ருத்ராக்ஷ மாலை அணிந்திருப்பதால் இவர்களைத் தரிசிப்பவர்கள் ஸகலபாவங்களையும் தொலைத்து பரிஸுத்தராகின்றார்கள்.

சுப்பிரமண்யர் வல்லி தேவியுடன் திரிசுதந்திர முனிவர்களின் இருதயகமலத்தில் வாசஞ் செய்வதால் அன்னோர்கள் யாவராலும் வணங்கத்தக்கவர்கள். யாதொருவர் இவர்களுக்கு தானம் செய்கிறார்களோ அவர்களுக்கு மோட்சம்கிடைக்குமென்பதில் சந்தேகமேயில்லை.

திருச்செந்தூரிலே ஸான்னித்யம் செய்யும் ஸுப்ரமண்யர் ஸன்னிதானத்தில் மாதந்தோறும் கார்த்திகை தினத்தில் கார்த்திகை நக்ஷத்திரத்தில் வதனாரம்ப தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து சுப்ரமண்யரைத் தரிசிக்கிறவர்கள் எல்லாவித பாபங்களுமகன்று நற்கதி பெறுகிறார்கள்.

எவர்கள் மாசி மாஸத்தில் வதனாரம்ப தீர்த்தத்தில் ஒன்று அல்லது இரண்டு தடவை ஸ்நானம் செய்கிறார்களோ அவர்கள் மறு பிறவியடைவதில்லை.

அற்பசி, சித்திரை இந்த விஷு புண்ய காலங்களில் ஸ்கந்த புஷ்கருணியில் ஸ்நானம் செய்கிறவர்கள் பாவ விமோசனத்தையும், தை ஆடி இந்த அயன புண்யகாலங் களில் ஷண்முகனைத் தரிசிப்பவர்கள் வாஜபேயம் என்ற யாகம் செய்த பலனையும் பெறுகின்றார்கள்.

ஆடி மாஸத்தில் பக்தியுடன் எவன் தயிர் சேர்ந்த அன்னம் நிவேதனம் செய்கின்றானோ அவன் அவரது ஸாரூப்பயத்தையும், ஆவணி மாதத்தில் அவர் ஸன்ன தியில் எவன் வேதபாராயணம் செய்கிறானோ அவன் யாகம் செய்த பயனையும் பெறுகிறான்.

புரட்டாசி மாஸத்தில் புண்ணிய ஸ்தலமாகிய திருச் செந்தூரில் சென்று எவர்கள் ஸந்தோஷத்துடன் சிரார்த்தம் செய்கிறார்களோ அவர்களின் பிதுர்க்கள் பிரம்ம லோகத்தை யடைகிறார்கள்.

மார்கழி மாஸத்தில் பக்தியுடன் தத்தியோதனம் நிவேதனம் செய்கிறவர்கள் விஷ்ணு லோக மடைகிறார் கள்.

தை மாதத்தில் எவர்கள் குகனுடைய ஸன்னிதியில் அகில பொடியாலோ, அல்லது சந்தனப் பொடியாலோ தூபம் சமர்ப்பித்து பக்தியுடன் பூஜை செய்கிறார்களோ அவர்கள் கைலாசத்தை யடைகிறார்கள்.

கார்த்திகை மாஸத்தில் எவன் மூட பக்தியினால் தரி சிக்காமலிருக்கிறானோ அவன் அட்டைகள் நிறைந்த நர கத்தை யடைகிறான்.

கார்த்திகை மாஸத்தில் ஸுப்ரமண்யர் ஸன்னிதி யில் பசுவின் நெய்யால் விளக்கு வைப்பவர்கள் முக்தி யடைவதில் ஸந்தேக மில்லை.

## வீரபாகு தேவருக்கு ஸுப்ரமண்யர் விபூதியை உபதேசித்தல்

ஆதியில் சூரபத்மாசுரன் வதமும் வல்லி-விவாகமும் நிகழ்ந்த பிறகு முருகக்கடவுள் ஜயந்தி க்ஷேத்திரத்திலே

வல்லி, தேவசேனையுடன் ஏகாந்தமாய் இருக்கும் பொழுது ஸர்வ கலா வல்லபவனாகிய வீரபாகு, தன் குரு மூர்த்தியான முருகனை நமஸ்கரித்து, "ஸ்வாமி புவனேஸா, ஸர்வ லோக ஸரண்யா, தேவரீர் இந்தப் பரம்மாண்டம் முழுவதும் எந்த வீபூதியால் வ்யாபித்திருக்கிறீரோ அந்த வீபூதியை நான் தியானித்து பூஜிப்பதற்கு எனக்கு உபதேசிக்க வேண்டும்" என பணிந்து வேண்டினன்.

அது கண்ட முருகபிரான், பக்தனை நோக்கி, "நமது வீபூதியானது எங்கும் நிறைந்திருக்கின்றது. நாம் உபதேசிப்பதைக் கேள், நீ பரிசுத்தனுவாய்" என்று கூறி, தேவசேனையின் பிரார்த்தனைக் கிசைந்து காக்ஷி தந்தருளிய ஸம்புவின் ஸந்நிதானத்திலே அமர்ந்து சின் முத்ரை தரித்து உபதேசிக்கின்றார் :

'ஓ, கணநாயகா! என்னை ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவைகளுக்கு கர்த்தாவாயும், பிரஜாபதிகளுள் பிரம்மனாகவும், உலகங்களில் ஸ்வர்க்க லோகமாகவும் நினைப்பாயாக.

'கண்டங்களில் பாரத கண்டமாகவும், பர்வதங்களில் மேருவாகவும், தேவர்களில் இந்திரனாகவும், புத்திசாலிகளில் பிரகஸ்பதியாகவும் என்னை நினை.

'என்னை ஸாரதிகளில் மாதலியாகவும், வாகனங்களில் புஷ்பகம் என்னும் ரதமாகவும், தேவமாதர்களில் ஊர்வசியாகவும், கானம் செய்பவர்களில் கந்தர்வனாகவும் நினை.

'என்னை மும்மூர்த்திகளின் உலகங்களில் கைலாசமாகவும், வாக்குகளுள் வேதங்களாகவும், உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம், பிரஸயம் என்னும் ஸ்வரமாகவும், அக்ஷரங்களில் ஓம் என்னும் அக்ஷரமாகவும் நினை.

'என்னை முனிவர்களில் அகஸ்தியனாகவும், யோகிகளில் தத்தாத்ரேயனாகவும், ஸித்தி பெற்றவர்களில் ஸனதனனாகவும் நினை.

'சிவபக்தர்களில் நாராயணனாகவும், புண்ய க்ஷேத்திரங்களில் காசியாகவும், பர்வதங்களில் இமய பர்வதமாகவும் என்னை அறிந்துகொள்.

'ஸ்ருஷ்டி செய்பவர்களுள் இரண்ய கர்ப்பனாகவும், ரக்ஷிப்பவர்களுள் மகாவிஷ்ணுவாகவும், நாஸம் செய்பவர்களில் காலாக்கினி ருத்திரனாகவும என்னை நினை.

'உபதேசிப்பவர்களுள் தக்ஷிண மூர்த்தியாகவும், ஸ்திரிகளில் ஹ்ரீ, ஸ்ரீ, கீர்த்தி என்றவராகவும், மாஸங்களுள் ஆவணி மாஸமாகவும் என்னை நினை.

'ப்ரம்ம ரிஷிகளுள் வஸிட்டரும், தேவரிஷிகளுள் நாரதரும், கஜங்களுள் ஸார்வபௌமன் என்னும் கஜமும், பசுக்களுள் காமதேனுவும் நானே.

'குதிரைகளுள் சூரியன் குதிரையும், மிருகங்களுள் ஸிம்ஹமும், பறவைகளுள் சரபம் என்பதும், ருத்திரர்களில் ஸங்கரனும் நானே.

'அரவங்களுள் ஆதிசேஷனும், தடாகங்களில் மானஸதீர்த்தமும், மந்திரங்களுள் காயத்ரியும், விருக்ஷங்களில் அரசும் நானே.

'கொல்பவர்க்குள் இயமனும், பரிசுத்தம் செய்பவர்களுள் வாயுவும், குரங்குகளில் அனுமானும், வில்லாளிகளில் ராமனும் நானே.

'தர்மங்களுள் ஸத்தியமும், யக்ஞங்களுள் அஸ்வமேதமும், பதிவிரதைகளில் பார்வதியும் நானே.

'ஆசைப்படுவதற்குரிய வஸ்துக்களில் ஸ்திரியும், தானங்களில் அபயதானமும், யதுகுலத்தரஸர்களில் கிருஷ்ணனும் நானே.

'அரிச்சந்திரனும், கங்கையும், க்ஷீரஸமுத்திரமும், சந்திரனும், வஸந்த ருதுவும், மன்மதனும், பிராணாயாமமும் நானேயாகின்றேன்.

'முத்தும், வஸ்திரமும், அர்யமாவும், இந்திரியங்களுக்குள் மனதும் நானே.

'புரூரவஸ்ஸூம், குபேரனும், மணிகர்ணிகையும், பர்வதமும் நானே.

'ஸேதுவும், மாதாவும், ராமனும், தர்மபுத்திரனும் நானே.

'யௌவனவஸ்தையும்; அந்தர்யாகமும், வாஸுகியும், சீதையும், வியாஸமுனியும் இன்னும், இம் மூவுலகங்களிலும் எவை இருக்கின்றனவோ அவை எல்லாம் நானே, என் அம்சமே. ஆகவே என்னை எப்பொழுதும் எங்கும் நிறைந்த பொருளாக எண்ணி வீபூதியணிந்து த்யானித்து பூஜிக்கக் கடவை" என்று உபதேசித்தார்.

## விஸ்வ ரூப தர்சனம்

இது கேட்ட வீரபாகு, "ஓ லோகநாயகா! உமதடிமையாகிய நான் பூஜிப்பதற்கு உமது வீபூதியைக் கேட்டதினால் கிருதார்த்தனானேன். அடியேனுக்குத் தாங்கள் விஸ்வரூபத்தைக் காட்டியருள வேண்டும்" என்று கேட்க, முருகன் "வீரபாகு! தேவர்களும் காண்பதற்கரிதான இந்த விஸ்வரூபத்தை திவ்விய ஞானக் கண்களால் நீ பார்" என்று கூறவும், வீரபாகு பிரம்மாண்டம் முழுவதையும் முருகப் பிரபுவின் சரீரத்தில் பார்த்தார்.

தேவர்கள், கெந்தர்வர்கள், ருத்திரர்கள், சந்திரன், சூரியன், ஆகாசம், குலபர்வதம், மகாமேரு பர்வதம், கங்கை முதலியவைகளைக் கண்டார். நான்கு முகத்துடன் கூடிய பிரம்மாவைக் கண்டார். ஆனந்த நர்த்தனம் செய்யும் பரமசிவனையும், பார்கடலில் பள்ளிகொண்ட நாராயணனையும் தவம் புரியும் கபிலரையும் கண்டார்.

முருகன் திருமேனியில் பதினாலு உலகங்களையும் கண்டார். மேலும் திவ்ய ஆபரணங்கள் அணிந்து,

பீதாம்பரம் தரித்து, திவ்விய குண்டலங்களோடு கோடி மன்மதர்களுக்கு நிகராகவும், கோடி சூரியப் பிரகாசம் போல் ஜொலிக்கிறவரும், உக்கிரமான நேத்திரங்களை யுடையவரும், கோடி சந்திரர்களுக்குத் துல்லியமான குளிர்ச்சியுடையவரும், ஆதி அந்தமில்லாதவரும், நிர்மல மாக உள்ளவருமான முருகனையே கண்டார்.

இதுகண்ட வீரபாகு, மிகமிக நடுநடுங்கி நமஸ்கரித்து முருகனை நோக்கி தாழ்ந்த குரலிலே, "தேவனே, உம்மைத் தேவர்கள் துதிக்கின்றனர்; கெந்தர்வர்கள் கானம் இசைக்கின்றனர்; முனிவர்கள் தியானம் செய் கின்றார்கள்; கின்னரர்கள் துதி பாடுகிறார்கள். யோகி கள் திகைக்கிறார்கள்; திக்பாலர்கள் பயப்படுகிறார்கள். சுவாமி, என்னால் உம்மைப் பார்க்க முடியவில்லை; தியானிக்கவும் மனது நிலைக்கவுமில்லை. உம்மை முன் பாகவும், பின்பாகவும், இரண்டு பக்கங்களிலும் நமஸ் கரிக்கின்றேன். உம்மை எப்பொழுதும் நமஸ்கரிக்கின் றேன். நான் வீரன், பலவான் என நினைத்து அபராதி யானேன். தேவரீர் என்னை மன்னித்து விஸ்வரூபத்தை மறைத்து ஸௌம்யமான ரூபத்தைக் காண்பிக்க வேண்டும்" என்றார்.

முருகனும் வீரபாகுவைத் தன் கைகளால் எடுத்து அணைத்து, "அன்பனே! முன்னால் இந்த ரூபத்தைக் காண்பதற்காக தேவர்களும், முனிவர்களும், சித்த கணங்களும், நந்தியும் தவம்செய்ய, நான் அவர்களிடம் ஜயந்தி க்ஷேத்திரத்திலே பக்தன் வீரபாகுவால் பிரார்த் திக்கப்பட்டு நான் விஸ்வரூபத்தைக் காட்டுகின்றேன், நீங்கள் எல்லோரும் பாருங்கள் என்று சொல்லியிருந் தேன். ஆகவேதான் இந்த ரூபத்தைக் காட்டினேன். ஆகவே, வீரபாகு, எவர் என்னையே சரணடைந்து, என் நாமங்களைக் கீர்த்தனம் செய்து, என் கதைகளைக்

என் மந்திரத்தை ஆவலுடன் ஜபிக்கிறார்களோ அவர்கள் என்னை அடைவது நிச்சயம்" என்று கூறினர். வீரபாகுவும் விஸ்வரூபத்தை நினைத்து நினைத்து மகிழ்ந்தான்.

## நாரதர் விஸ்வரூபம் கண்டு வைகுண்டம் சேர்தல், விஷ்ணுவும் நாரதரும் திருச்செந்தூருக்கு எழுந்தருளல்

விஸ்வரூப தரிசனம் கண்ட நாரதர் பேரானந்தமடைந்து வீணையால் தன் திருமேனி விளங்க விஷ்ணு இருப்பிடமாகிய வைகுண்டம் அடைந்தார். ஆங்கு ஸனந்தர், நந்தர், கருடன், ஆதிசித்தர்கள், ஸனகர், காமதேனு, சித்தர்கள், அப்ஸரஸ்திரிகள், பக்தர்கள் ஆகியோர் மஹாவிஷ்ணுவைத் தியானித்து நிற்பதைக் கண்டார். விஷ்ணுவானவர் நாரதரை நோக்கி, "நாரதா! நீ ஏதோ ஆச்சரியம் கண்டு என்னிடம் சொல்ல வந்தவனாகத் தெரிவதால் அதனை உடனே தெரிவியுங்கள்" என நாரதர் சொல்லலானர்:—

"ஷண்முக பகவான் வல்லி, தேவசேனையுடன் ஜயந்திபுரமென்ற திருச்செந்தூரிலே ஸகல தேவர்களும் ஸேவிக்க, வீரபாகுவுக்கு காக்ஷியளித்தார். அதிஸயிக்கத் தக்க விஸ்வரூப தரிசனத்தை திரிஸ்வதந்திரர்களுடன் அடியேனும் தரிசித்தேன். இச்செய்தியைத் தேவரீருடைய திருவடிகளிலே ஸமர்ப்பித்துச் செல்லவே வந்தேன்" என்று சொன்னர். இதுகண்ட பகவான், தனது மந்தஹாஸங்களால் வைகுண்டம் முழுவதும் பிரகாசிக்கச் செய்து, "ஓ நாரதா! உமக்கு ஒரு தத்துவத்தை விளக்குகின்றேன், கேளும். இதனல் நீர் பரிசுத்தனவீர். அந்த சுப்பிரமணியன் நானும் ஸம்புவும் சேர்ந்த மூர்த்தியே ஆவர். சிவனுடைய ஐந்து முகத்துடன் எனது ஒரு முகமும் சேர்ந்து ஆறு முகமாயிற்று. என் நான்கு கரங்களுடன் சிவனின் எட்டுக் கரங்களும் சேர்ந்து பன்னிரெண்டு கரங்களாயிற்று; சிவனின்

சூலமும் எனது சக்கரமும் சேர்ந்து முருகனின் வேலா யிற்று. சிவனுடைய வலது நேத்திரத்திலிருந்து உண்டான வல்லியும், எனது வலது நேத்திரத்திலிருந்து உண்டான தேவசேனையும் குகனின் இரு தேவிமாரானார்கள். அவரிடம் நாங்கள் வசித்து வருகின்ற காரணத்தால் ப்ரமண்யம் அதிகரித்து சுப்ரமண்யம் என்று அழைக்கப் படுகிறார். அஷ்டாக்ஷரம் (ஓம் நமோ, நாராயணாய) பஞ்சாக்ஷரம் (ஓம் நமசிவாய) இவை இரண்டும் சேர்ந்தே சரவணபவ என வந்தது. பூமி முழுவதும் எனது சொருபமும், பர்வதங்கள் முழுவதும் சிவசொருபமாகவும் இருக்கின்றது. ஹரிஹர சொருபமான ஆறு தினங்களும் (பிரதமை, துவிதியை, திருதியை, சதுர்த்தி, பஞ்சமி, ஷஷ்டி) கிருத்திகா தேவிகளாம். என்னையும் சிவனையும் ஆராதிக்கும் பலனை குகபக்தர்கள் பெறுகிறார்கள். பிர்ம்மாவும் ருத்ரனும் குகனுக்கு இரு பாகங்களிலும், நான் நடுவிலுமாக வசிக்கிறோம்."

இவ்வாறு கூறிய விஷ்ணுவானவர் நாரதரால் பின் செல்லப்பட்டு, ஒரு நிமிஷத்தில் லக்ஷ்மியுடன் ஜயந்தி புரம் வந்தடைந்தார். அங்கு வந்த விஷ்ணுவானவர் அதையே தன திருப்பிடமாகக் கொண்டார். பிரம்மாவும் ஐந்தாவது முகம் கிடைப்பதற்காக அங்கேயே வாசம் செய்கின்றார்.

இப்படிப்பட்ட குகனுடைய நாம ஸங்கீர்த்தனத்தை தியானிக்கிறவர்கள் ஹரி, ஹரன் இருவர்களுக்கும் பிரியராகிறார்கள்.

## தேவேந்திரனுக்கு சாபம் கிடைத்ததும் அதன் விமோசனமும்

முன்னொரு காலத்தில் துர்வாஸமுனி தனக்குக் கிடைத்த பாரிஜாத மாலையை எடுத்துக்கொண்டு ஆகாய மார்க்கமாக வரும் வழியில் இந்திரனைக் கண்டு அவனிடம் அந்த மாலையைக் கொடுத்தார்.

இந்திரன் அம்மாலையை வாங்கி அதை அலட்சியமாக ஐராவதத்தின் மேலெறிய, அதுவும் அதனைத் தன் கையால் கசக்கி தூர எறிந்தது. இதுகண்ட துர்வாஸமுனி வெகுண்டு, "ஓ தேவராஜனே! நீ என்னை அவமதித்தபடியால் சிலகாலம் ஐஸ்வர்யத்தை இழக்கக் கடவை" என்று சபித்தார். "இனி ஒருகால் அமிர்தத்தின் காரணமாக ஸமுத்திரமதனம் நடக்கின்ற காலத்தில் மகாலக்ஷ்மி தோன்றுவாள். அவள் கிருபையினால் உனது சாபம் நீங்கும். அதுவரை நீ ஆறுமுகப் பிரபுவைத் தியானிப்பாயாக" என்றார். இதன்படி இந்திரன் திருச்செந்தூரை அடைந்து, வதனாரம்பத்தில் ஸ்நானம் செய்து, முருகனை வழிபட்டு, வரலக்ஷ்மியின் கிருபையால் கிருதாயுகத்தின் மத்தியில் ஸாபத்திலிருந்து விடுபட்டு முன்போல் தன் பதவியை அடைந்தான். ஐராவதமும் ஜயந்தியை அடைந்து குகனை வழிபட்டு தான் செய்த பாவத்தை நீக்கிக்கொண்டது.

## காசி முனிவர்கள் கூறிய ஸ்தல மகிமை

வஸிட்டர்:—இப்பூமியில் போக மோக்ஷங்களைத் தரும் ஸ்தலங்கள் அநேகம் இருப்பினும் அவை யாவும் ஜயந்திக்குக் கீழ்பட்டவைகளே; ஸந்தேகமில்லை.

வாமதேவர்:—பிரம்ம ஹத்தி செய்தவனும், வேதங்களைத் தூஷித்தவனும்கூட ஜயந்தியில் ஒருநாள் வசிப்பானாகில் பரிசுத்தன் ஆகிறான்.

ஜபாலி:—புஷ்கரணிக் கீடானது எதுவுமில்லை.

காஸ்யபர்:-பிரயாயையில் ஆயுள்பரியந்தம் ஸ்நானம் செய்யும் பலனை கார்த்திகை நக்ஷத்திரத்தில் ஒரு தடவை சுப்பிரமணியர் ஸன்னிதியில் ஸ்நானம் செய்வதால் அடைகிறான்.

மார்க்கண்டேயர்:—ரிஷிகள் காசியில் ஒரு வருடத்தில் சம்பாதிக்கிற புண்ணியத்தை திருச்செந்தூரில் ஒரு நாளில் அடைவார்கள்.

கௌதமர் :—ஆயிரக்கணக்கான யுகங்கள் செய்யும் அன்னதான பலனை ஜயந்தியில் வஸிப்பதால் அடையலாம்.

மௌத்கல்யர் :—தவத்தின் பயனை ஜயந்தி வாசத்தால் பெறலாம்; இது ஸத்தியம்.

விஸ்வாமித்திரர் :-நூறு அஸ்வமேத யாகங்களினால் பெறும் பயனை ஜயந்தி வாசத்தால் கோடி பங்கு அதிகமாகப் பெறலாம்.

இந்த ஸ்தலத்தில் வசிக்கும் சுப்பிரமணியரைத் தியானிக்காமல் இருப்பவன் கழுதையாகப் பிறக்கின்றான். இந்த இடத்தில் மரித்த கழுதையும் மறுபிறப்பு ஒழிந்து மோக்ஷத்தை அடைகின்றது.

## அதிதிதேவி ஸந்தானம் பெற்றது

அதிதி தேவியானவள் புத்திர பாக்கியத்தைப் பெறும்பொருட்டு அதன் உபாயத்தை உபதேசிக்குமாறு நாரதரைக் கேட்க, அவர், "தேவி! கார்த்திகை மாதத்தில் பௌர்ணமி தினத்தில் அதிகாலையில் ஸ்நானம் செய்து தபாமூர்த்தியாகிய குகனை வணங்க வேண்டும். சூரன்மன் மாமாய் நிற்க முருகன் அதை சேதித்த இடத்திலிருந்து மண் எடுத்து வேல்ரூபம் செய்து பண்ணிக்கொண்டு நமஸ்காரம் செய்து, குமாரசூக்தம் என்னும் மந்திரத்தை நூற்றெட்டுத் தடவை ஜெபித்தால் நீ வேண்டும் வரத்தினை முருகன் அருள்வான்" என்று கூற, அதிதிதேவியும் அவ்வாறு செய்து இந்திரனையும், உபேந்திரனையும் புத்திரர்களாகப் பெற்றாள்.

## துலுக்கன் மோட்சமடைந்த சரித்திரம்

முன் ஒரு காலத்தில் ஒரு துலுக்கன் கப்பல் யாத்திரை செய்துவரும் வியாபாரிகளைக் கொன்றும், அவர்களின் பணத்தைக் கொள்ளையடித்தும், துஷ்டர்களைக் கூட்டிக்கொண்டு பசுக்களைக் கொன்றும், அவைகளின் மாமிசத்தைத் தின்றும் வந்தான். அவன் ஒருநாள் திருச்செந்தூரையடைந்து குகனை நோக்கி, 'இது யார்?' என்று

த்ரிசுதந்திரர்களை நோக்கிக் கேட்டான். உடன் த்ரிசுதந்திரர்கள் முருகனின் மகிமையைச் சொல்ல, அவன் சிரித்து, குகனைத் தூஷித்து, வாளைக் கையிலெடுத்துக் கொண்டு அவரை நோக்கி ஓடும்பொழுது கால் இடறிக் கீழே விழுந்து உயிர் நீங்கினன். அவன் உயிரைக் கொண்டுபோக வந்த யமதூதர்கள் குகதூதர்களால் விரட்டியடிக்கப்பட்டு நிகழ்ந்ததை யமனிடம் கூற, யமன் உடனே ஜெயந்தியை அடைந்து முருகனை வணங்கி, "சுவாமி! இந்தத் துலுக்கன் உலகிலே சகல பாவங்களையும் செய்தவன். இவன் உயிரைக் கொண்டுவர வந்த தூதர்கள் தங்கள் தூதர்களால் விரட்டப்பட்டார்கள். இவன் எப்படித் தப்பித்தான்? இந்த அதிசயத்தைக் கேட்கவே வந்தேன்" என்றான்.

அது கண்ட குகனும் "யமனே! இவன் இந்த ஜெயந்திபுரத்தை வந்தடைந்த உடனேயே தன் சகல பாவங்களையும் நீக்கிவிட்டான். அதனாலே அவன் மோட்சத்திற்கு அருகதையை பெற்றுவிட்டான். நாம் கிருபை செய்துவிட்டோம். நீ உன் இருப்பிடம் செல்வாயாக', என்றுகூற யமனும் தன் இருப்பிடம்போய்ச்சேர்ந்தான்.

நினைத்த மாத்திரத்திலேயே முக்தியை அடைவதற்குறிய ஒரே இடம் முருகன் இருப்பிடமாகிய திருச்செந்தூரே யாகும்.

## ஸூகர் திருச்செந்தூர் வந்து முருகனைத் தியானித்தல்

சுப்ரமண்ணியரின் மகிமையைக் கேட்ட ஸூகர் மிகவும் மகிழ்ந்து ஹரித்துவாரம், கேதார க்ஷேத்திரம், பிரயாகை, கோகர்ணம், திருப்பதி, விருத்தாச்சலம், காளஹஸ்தி, சிதம்பரம், ஸ்ரீரெங்கம், மதுரை முதலிய இடங்களில் வாசம் செய்துவரும் தெய்வங்களை வணங்கி பின்னர் ஜெயந்தி நகரடைந்து மிக மிக சந்தோஸத்தையடைந்து முருகனை வணங்கினர்.

"ஆறு முகங்களையும் ஈராறு கைகளையும் உடையவரும் வல்லி, தேவஸேனை என்ற இரண்டு தேவிமாருடன் கூடியவராயுமுள்ள மயில்வாகனனாகிய குகனை வணங்குகின்றேன்.

'ஆனந்த மூர்த்தியாக விளங்கும் ஷண்முகனை நமஸ்கரிக்கின்றேன்.

'உலகமாதாவின் திருமகனாய் விளங்கும் சுப்பிரமணியரை நமஸ்கரிக்கின்றேன்.

'ஆனந்தசொரூபியும், ஆகாயத்தைக் கடந்தவரும், தேவர்களால் ஸேவிக்கப்பட்டவரும் மயில் வாகனரும் எங்கும் நிறைந்தவருமாகிய முருகனை வணங்குகின்றேன்."

இவ்வாறாக ஸூதருக்கு வியாசரால் சொல்லப்பட்ட முருக பரமாத்மாவின் மகிமையை யார் சொல்லுகிறார்களோ, யார் கேட்கிறார்களோ, அவர்கள் எல்லோரும் சகல பாக்கியங்களையும் பெற்று முருகன் அருளுக்கு பாத்திரமாகிறார்கள். ஓம். குகாயநம. ஓம் குகாயநம. ஓம். குகாயநம. முருகா! முருகா! முருகா! வருவாய் வருவாய்! வருவாய்! வரமே தருவாய்!

## திருச்செந்தூர்

இவ்வூர் திருநெல்வேலி மாவட்டத்தில் நெல்லை நகருக்கு 36 மைல் தெற்கேயுள்ளது. இஃது முருகனின் ஆறுபடை வீடுகளில் ஒன்றாக அமைந்து பாடல்பெற்ற ஸ்தலமாகும். அப்பனின் ஆலயம் அலைவந்து மோதும் கடற்கரை அருகே அழகுற அமைக்கப்பட்டுள்ளது. இதனால் இத்தலம் திருச்சீரலைவாய் எனப் பெயர்பெற்றது. இந்நகரை "வெண்டலைப்புணரி அலைக்கும் செந்தில்" என புறநானூறும், "சீர்கெழு செந்தில்" என சிலப்பதிகாரமும் மிகவும் புகழ்ந்து கூறுகின்றன. இஃது 20000 ஜனத்தொகை கொண்ட பெரிய ஊராகும். இவ்விடம் முருகப்பிரான் சூரனை சம்ஹாரம் செய்து அவ்வெற்றியைக் கொண்டாடியதால் ஜெயந்திபுரமென்றும் அழைக்கப்படுகிறது. கந்தமாதன பர்வதத்தைக் குடைந்து இங்குள்ள ஆலயம் முன்பு அமைக்கப்பட்டுள்ளதற்குச் சான்றாக பிரகாரத்தில் பள்ளிகொண்ட பெருமாளும் கஜலக்ஷ்மியும் காட்சி தருகின்றனர்.

கோவிலினுள் நாம் செல்லும்பொழுதே ஆறுமுகப் பெருமான் காட்சி தருகின்றார். கிழக்குநோக்கி நிற்கின்ற திருக் கோலத்திலே சுப்பிரமணியர் காட்சி கொடுக்கின்றார். முருகப்பெருமான் மூலஸ்தானத்தில் சிவலிங்கத்தைப் பூஜிப்பதாக ஐதிகம்.

ஊரின் மத்தியில் ஒரு பழைய சிவன் கோவில் அமைந்துள்ளது.

கடற்கரை ஓரத்திலே ஓர் அழகிய குகைக்கோயில் உள்ளது. ஈண்டு ஸ்ரீ வள்ளி தேவியார் ஒளிந்துகொண்டதாக ஐதீகம்.

பாஞ்சாலங்குரிச்சியை ஆண்டுவந்த மன்னர் கட்டப் பொம்மன் முருகபிரானிடம் பக்திகொண்டு இங்கு பல மண்டபங்களைக் கட்டியுள்ளான்.

ஆலயத்தில் ஒன்பது காலமும் நடைபெறும் பூஜை கண்கொள்ளாக் காட்சியாகும்.

ஊமையாய் இருந்த குமரகுருபரன் தனது ஐந்தாவது வயதில் முருகன் அருள்பெற்று "கந்தர் கலி வெண்பா" பாடிய ஸ்தலம் இதுவே.

## திருநாளும் தரிசனமும்

சித்திரை:—விஷு புண்ணிய நாள்—முருகனுக்கு அன்னபிஷேகம் நடைபெறும்.

வைகாசி:—சுக்கிலபக்ஷ ஷஷ்டியில் வஸந்த திருநாள் ஆரம்பமாகி 10 தினங்கள் நடைபெறும். விசாகத்தன்று லக்ஷக்கணக்கான ஜனங்கள் கூடி முருகனைத் தரிசித்து மகிழ்வடைவார்கள்.

ஆனி:—உத்திர நக்ஷத்திரத்தில் நடராஜப் பெருமானுக்கு அபிஷேக அலங்காரங்கள் நடைபெறுகின்றது.

ஆடி:—இம்மாதத்தில் பார்வதியம்மன் முளைக்கட்டு ஊஞ்சல், சேரமான் பெருமாள் திருநாள், ஆடி அம்மா வாசை காலை தீர்த்தவாரி முதலியவை நடைபெறும்.

ஆவணி:—அஸ்வதி நக்ஷத்திரத்தில் ஆவணித் திரு நாள் ஆரம்பமாகி 12 தினங்கள் நடைபெறும். சுவாமி தங்கமயில், இந்திரவிமானம், கனகதண்டிகை இவை களின் மீது வீதிவலம் வருவது கண்கொள்ளாக் காட்சி யாகும்.

புரட்டாசி:—நவராத்திரி உத்ஸவம் நடைபெறும்.

ஐப்பசி:—1-ம்வ ஸ்ரீ ஷண்முகர் அன்னாபிஷேகம் நடைபெறும். பிரதமையில் கந்த சஷ்டி உத்ஸவம் ஆரம்பித்து 6 தினங்கள் நடைபெறும். சூர ஸம்ஹார மும், மறுநாள் மாலை நடைபெறும் திருக்கல்யாணமும் கண்கொள்ளாக் காட்சியாகும்.

கார்த்திகை:—ஜோதி தரிசனம்.

மார்கழி:—திருவாதிரையன்று நடராஜர் தரிசனம்

தை:—பூச நக்ஷத்திரத்தில் சுவாமி தங்கமயில் மீதமர்ந்து வீதிவலம் வருவார்.

மாசி:—இந்த மாதம் பெரிய திருநாள் நடைபெறும். இந்த உத்ஸவம் அஸ்வதி நக்ஷத்திரத்தில் ஆரம்பமாகும். மக நக்ஷத்திரத்தில் பெரிய ரதத்தின்மேல் சுவாமி அமர்ந்து வலம் வருவார்.

பங்குனி:—உத்திர நக்ஷத்திரத்தில் ஸ்ரீ வள்ளிநாயகி திருக்கல்யாணம் நடைபெறும்.

வேலுண்டு — வினையில்லை
கந்தனுண்டு — கவலையில்லை
செந்தில் வாழ் கந்தனின் திருவடி பணிவோம்.

சுபம்!